Regd : No. TN - MS C 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS Phone 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE PAYMENT LICENCE NO G 6 - TN MS (C P. P 5

மனவளம்



மனிதன் மனவளமும் மனத்திடமும் பெற வேண்டும். பகுத்தறிவு உள்ளவனாக வாழ வேண்டும்.

-பேறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

எண்ணம்

நலம் செய்ய முந்த வேண்டும் நல்லதை எண்ண வேண்டும்.

-தந்தை பெரியார்



மலர்: 8 சென்னை 26 - 9 - 1984 புதன் ❋❋ வெளியூர் 27 - 9 - 1984 வியாழன் இதழ் 340

## தொழிலாளர் நலன் காப்பது தமிழக அரசு:

# தொழிலாளர் விரோத அரசு என்று முதல்வர்மீது குறைகூறுவதா?

## முதுபெரும் தொழிற்சங்கத் தலைவர் ஜி. ராமானுஜம் கண்டனம்

திருச்சி. செப். 26- தமிழக அரசு தொழிலாளர் நலனுக்கு எதிரான அரசல்ல. தொழிலாளர் நலனுக்கு எதிராக முதல்வர் எம். ஜி. ஆர். செயல்படுகிறார் என்று சில தொழிற்சங்கத் தலைவர்கள் கூறுவது அரசியல் உள் நோக்கம் கொண்டது என்று முதுபெரும் தொழிற்சங்கத் தலைவர் ஜி. ராமானுஜம் கூறினார்.

ஐ. என். டி. யூ. சி. தொழிற்சங்க பொதுச் செயலாளரும் முதுபெரும் தொழிற்சங்கத் தலைவருமான ஜி. ராமானுஜம் திருச்சியில் நிருபர்களுக்குப்பேட்டி அளித்தார்.

அப்போது அவர் கூறியதாவது:-

தற்போது சாதாரண தொழிலாளிக்கும் சுமார் ஆயிரம்ரூபாய் அளவுக்குச் சம்பளம்வருகிறது.

ஆனால் சில தொழிலாளிகளின் தவறான பழக்க வழக்கங்களால் அவர்களின் வாழ்க்கைத்தரம் உயரவில்லை.

அதிகபட்ச போனஸ் ரூ. 1600 தான் என்று மத்திய அரசு நிர்ணயித்துள்ள உச்ச வரம்பை அகற்ற வேண்டும்.

சம்பளவித்தியாசமின்றி எல்லா தொழிலாளர்களும் போனஸ் பெற தகுதி படைத்தவர்களாக்கப்பட வேண்டும் என்று மத்திய அரசை கேட்டுக்கொள்கிறேன்.

தமிழ்நாடு அரசின் தொழிலாளர் கொள்கை தொழிலாளர்களின் நலனுக்கு எதிரானது அல்ல.

முதல்வர் எம். ஜி. ஆர். தொழிலாளர்களின் நலனுக்கு விரோதமானவர் என்று சிலர் பிரச்சாரம் செய்வது அரசியல் உள் நோக்கம்கொண்டதாகும்.

இவ்வாறு தொழிற்சங்கத்தலைவர் ஜி. ராமானுஜம் கூறினார்.



பேரணியில் இடம்பெற உள்ள சாதனை விளக்க கட்- அவுட்களை பொதுச் செயலாளர் ப. உ. ச, பொருளாளர் மாதவன், ஜேப்பியார், எம். எல். சி, எ.சி. சண்முகம் எம். எல். ஏ. ஆகியோர் பார்வையிட்டனர்.

பிரதான வழக்கு முடியும் வரை

## கழகத்தின் - பெயர் - கொடியை மாற்றார் பயன்படுத்த கோர்ட் தடை

### எஸ். டி. சோமசுந்தரம் மனு தள்ளுபடி

சென்னை, செப் 26- பிரதான வழக்கு முடியும் வரை கழகத்தின் பெயரையும் - கழகக் கொடியையும் சோமசுந்தரம் கட்சியினர் பயன்படுத்த நீதிமன்றம் தடை விதித்துள்ளது. சோமசுந்தரம் தாக்கல் செய்த மனு தள்ளுபடி செய்யப்பட்டது.

கழகத்தின் பெயரையும், கழகக்கொடியையும் பயன்படுத்துவதை தடை செய்யக்கோரி 11-வது சிட்டிசிவில் கோர்ட்டில் கழகத்தின் சார்பில் மனு தாக்கல் செய்யப்பட்டு இருந்தது தெரிந்ததே.

இந்த மனு மீது 6-ம் தேதி முதல் இடைக்கால தடைவிதிக்கப்பட்டு இருந்தது.

கழகத்தின்சார்பில்தாக்கல் செய்யப்பட்ட மற்றோர் மனுவும் அனுமதிக்கப்பட்டது.

இதன் மீது விவாதம் நடந்தது. அதன் பிறகு நீதிபதி ஜி எஸ், நடராசன் இன்று தீர்ப்பு கூறினார்.

அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் என்றிருந்தாலும் அண்ணா தி.மு.க என்றே எல்லோரும் சொல்கிறார்கள்.

தி. க.-தி. மு. க. என்று பிரிந்து வந்தது என்ற வாதம் சரியல்ல.

முதன் முதலில்அண்ணாவின் பெயரை கட்சியில் பயன்படுத்தியவர்கள் அண்ணா தி. மு. க.தான் பொதுமக்கள் மத்தியிலும் அண்ணா தி.மு.க. என்று அழைக்கப்படுகிறது.

கருணாநிதி உட்பட எதிர்க் கட்சியினர் அண்மைக்காலம்வரை அண்ணா தி.மு.க. என்று தான் குறிப்பிட்டு வந்திருக்கின்றனர்.

உயர் நீதி மன்றத்தில் உள்ள ஒரு வழக்கில்கூட அண்ணா தி மு க. என்று தான் இருக்கிறது.

தேர்தல் கமிஷன் அறிவிப்பில்கூட அண்ணா தி.மு.க. என்றுதான் இருக்கிறது.

இந்த பெயரை இன்னொரு கட்சி பயன்படுத்தினால் பொது மக்கள் மத்தியில் குழப்பம் ஏற்படும்.

அதுபோல கட்சிக் கொடியிலும் கறுப்பு, சிவப்பு, நடுவில்வெள்ளை நிறம் இருந்தால் தூரத்தில இருந்து பார்த்தால குழப்பம் ஏற்படும்.

ஆகவே பிரதானவழக்கு முடியும் வரை ஏற்கனவே பிறப்பித்ததடை உத்தரவு நீடிக்கும்.

எஸ். டி. சோமசுந்தரம் மனு தள்ளுபடி செய்யப்படுகிறது என்று நீதிபதி நடராசன் தீர்ப்பில் குறிப்பிட்டார்.

∴ 30 வரவேற்புவளைவுகள்: கழக அரசு சாதனைகளை விளக்கும் கட் - அவுட்டுகள்

## பேரறிஞர் அண்ணா பவளவிழா பேரணி

# 6500 வாகனங்கள் அணிதிரளும் மாட்சி

### தமிழகமே தலைநகரில் கூடுகிறது

சென்னை. செப். 26. தங்கத் தலைவனுக்கு தலைநகர் சென்னை எடுக்கும் பவளவிழா பேரணியில் 6500 வாகனங்களில் கழக செயல் வீரர்கள் அணிவகுத்துச் செல்கின்றனர். தமிழகமே தலைநகர்நோக்கி திரண்டுவர தயாராகி வருகிறது.

தலைநகரை குலுக்கும் அண்ணா பவளவிழா பேரணிக்கு வெளியூர்களிலிருந்து 6,500 வாகனங்களில் கழகத்தினர் அணி திரள்கிறார்கள் என்று ஜேப்பியார் எம். எல். சி. தெரிவித்தார்.

பேரறிஞர்அண்ணாபவள விழாவையொட்டி சென்னை மாவட்ட கழகத்தின் சார்பில் எடுக்கப்படும்பேரணிபற்றி மாவட்ட செயலாளர் ஜேப்பியார் எம். எல். சி. கூறியதாவது:-

வரலாற்று நாயகன் நம்மை வளர்த்து ஆளாக்கிய அரசியல் ஆசான் பேரறிஞர் அண்ணாஅவர்களின் 75வது பிறந்த ஆண்டை பவளவிழாவாக சென்னை மாவட்ட கழகத்தின் சார்பில் சிறப்பாக கொண்டாட ஏற்பாடுகள் செய்து இருக்கிறோம்.

முதல்வர் புரட்சித் தலைவர் தலைமை ஏற்று நடத்தும் பேரணியில் தமிழகம் எங்குமுள்ள கழகத்தினர் திரளாக வந்து கலந்து கொள்கின்றனர் ஆங்காங்குள்ள கழகச் செயலாளர்களும், கழக அமைப்பைச் சேர்ந்த அமைப்பாளர்களும் தங்கள் தங்கள் ஊர்களிலிருந்துசென்னை நகர் பேரணிக்கு வரும் விபரங்களை கடிதங்கள் மூலம் தெரிவித்துக் கொண்டு இருக்கிறார்கள்.

வெளியூர்களிலிருந்து மட்டும் 5 ஆயிரம் பஸ்களும், 2 ஆயிரத்துக்கும் மேற்பட்ட வேன்களும், 1500 கார்களும் வருகின்றன.

இந்த வாகனங்களில் கழக, மன்ற, எம்.ஜி ஆர். இளைஞர் அணி மாணவர், மகளிர், தொழிலாளர் அணியினர் திரண்டு வருகிறார்கள்.

### வரவேற்பு வளைவுகள்

ஊர்வலப் பாதை முழுவதும் 30 வரவேற்பு வளைவுகள் அமைக்கப்படுகின்றன.

இந்த வளைவுகளை கழகச் சாதனைகள் அடங்கிய 'கட் - அவுட்'டுகள் அலங்கரிக்கும்.

கட் - அவுட்டுகளை கழக பொதுச்செயலாளர் ப.உ.ச,வும், பொருளாளர் மாதவனும்பார்வையிட்டனர்.

இவ்வாறு ஜேப்பியார் எம். எல். சி கூறினார்.

அப்போது கு.க. செல்வம் டி.கே, கபாலி எம்.எல்.ஏ எ. சி. சண்முகம்எம்.எல்.ஏ சைதைதுரைசாமி, பூங்கா நகர் குமார் ஆகியோர் உடன் இருந்தனர்.

### சாதனை விளக்கும் கட்- அவுட்

★ வறுமைக் கோட்டிற்குக் கீழே நாளும் வாடுகின்ற மக்களின் குழந்தைகளுக்குசத்துணவு அளிக்கும் கலியுகப் பாரி புரட்சித்தலைவரின் சத்துணவுத் திட்டத்தை விளக்கும் கட்- அவுட்.

★ உடல் ஊனமுற்றுஇருந்தாலும் உள்ளத்தால் ஊனமடையக் கூடாது என்று அறிவுரை வழங்கும் புரட்சித் தலைவர் ஊனமுற்றோருக்கு 3 சக்கர சைக்கிள் வழங்கும் காட்சி.

★ குடிசையில் வாழ்ந்தாலும், கூடகோபுரத்தில் வாழ்ந்தாலும் அரசு அளிக்கும் மின்சாரத்தை அனைவரும் பயன் படுத்த வேண்டும் என்றஎண்ணத்தில் ஏழை குடிசைகளுக்கு புரட்சிததலைவர் இலவச மின்சாரம் வழங்கும் காட்சி.

★ நாளும் உணவளிக்கும் விவசாயப் பெருங்குடி மக்களின் அல்லல் தீர்க்கும் வகையில பாட்டாளி பெருமக்களுக்கு முதலவர் புரட்சித் தலைவர் பம்பு செட் வழங்கும் காட்சி.

★ இந்த நாட்டின் அமைதியை காத்து நாளும் மக்கள் தொண்டே நம் தொண்டு என்று செயலாற்றும் காவல் துறையினருக்கு முதல்வர் புரட்சித் தலைவர் சீருடை வழங்கும் கட்அவுட்.

★ பெற்ற மகன் கைவிட்டாலும் உங்கள் வீட்டுப் பிள்ளை நானிருக்கிறேன் என்று பெறாத மகன் புரட்சித் தலைவர் வயது முதிர்ந்த தாய் தந்தையருக்கு வேட்டி- சேலை வழங்கும் கண்கொள்ளாக் காட்சி கட் அவுட்டாக இடம் பெற்றுள்ளது.

★ பல்கலைக் கழகத்தில் படிக்காவிட்டாலும் நாட்டு மக்களின் ஏழை- எளிய பாட்டாளிகளின் வாழ்க்கையை படித்தவர் புரட்சித்தலைவர்அவருக்கு சென்னை பல்கலைக் கழகம் டாக்டர் பட்டம் வழங்கிய கண்கொள்ளாக் காட்சி கட்அவுட்.

★ "தம்பி நீ மூன்று லட்சம் அளிக்க வேண்டாம் உன் முகத்தை காட்டினாலே லட்சம் வாக்குகள் கிடைக்கும். நீ என் இதயக்கனி" என்று உரைத்த பேரறிஞர் அண்ணா அவர்கள் புரட்சித் தலைவருக்கு ரிக்ஷாக்காரன் படவிழாவில பதக்கம் அளிக்கும் காணக் கிடைக்காத காட்சி கட் அவுட்டாக இடம்பெற்றுள்ளது

ஒவ்வொன்றும் 15அடி உயரமுள்ள இந்த கட் அவுட்டுகள் அலங்கார வரவேற்பு வளைவுகளில் இடம் பெற இருப்பது மகிழ்ச்சிக்கு உரியதாகும்.

## ஜனாதிபதி ஜைல்சிங் மொரிஷியஸ் செல்கிறார்

புதுடெல்லி, செப். 26— மொரீஷியஸ், தெற்கு ஏமன், வடக்கு ஏமன் ஆகிய நாடுகளில் 10 நாட்கள் சுற்றுப் பயணம் செய்வதற்காக ஜனாதிபதி ஜைல்சிங் அக்டோபர் 22-ந் தேதி புறப்படுகிறார்.

முதலில் அக்டோபர் 22ந் தேதியிலிருந்து 27-ந்தேதி வரை மொரிஷியஸ் நாட்டில் சுற்றுப் பயணம் செய்வார்.

பிரதமர் இந்திராகாந்தி அறிவிப்பையொட்டி

# பொற்கோயிலில் இருந்து ராணுவம் வாபஸ் ஆனது

புதுடெல்லி. செப். 26. அமிர்தசரஸ் பொற்கோவிலிலிருந்து ராணுவம் வாபஸ் பெறப்பட்டது.

அகால்தக்த் (கருவறை) கட்டிடத்தில் ஏற்பட்டிருந்த பழுதை சரிசெய்தாகி விட்டது.

எனவே ராணுவத்தை பொற்கோவிலிருந்து வாபஸ் பெறுவது என்று மத்திய அரசு முடிவு செய்திருப்பதாக பிரதமர் இந்திரா காந்தி அறிவித்ததை யொட்டி இவ்வாறு பொற்கோவிலிருந்து ராணுவம் முழுவதும் வாபஸ் பெறப்பட்டது.

காலிஸ்தான் தனிநாடு உள்பட பல்வேறு கோரிக்கைகளை வற்புறுத்தி பிந்தரன்வாலே தலைமையில் தீவிர வாதிகள் இரண்டு ஆண்டுகளுக்கும் மேலாக பஞ்சாபில வெறியாட்டம் ஆடினார்கள்.

## நவீன ஆயுதங்கள்

அமிர்தசரசில் உள்ள பொற்கோவில் உள்பட 36 சீக்கிய கோவில்களில் மலைமலையாக நவீன ரக ஆயுதங்களை குவித்து வைத்து, வன்முறைக்கு எதிரானவர்களையெல்லாம் கொன்று குவித்து வந்தனர்.

இந்த நடவடிக்கைகளுக்கு ஒரு முற்றுப்புள்ளி வைக்கவேண்டிய அவசியம் ஏற்படவே, கடந்த ஜூன் மாதம் முதல வாரத்தில் பொற்கோவில உள்பட 36 சீக்கியகோவில்களிலும் ராணுவ நடவடிக்கை மேறகொள்ளப்பட்டது.

அதில் பிந்தரன்வாலே உள்பட பல பயங்கரவாதிகள் உயிர்இழந்தனர்.

இந்த ராணுவ நடவடிக்கையின போது பொற்கோவிலில் அகால தக்த் (கருவறை) கட்டிடம் கொஞ்சம் சேதம் அடைந்தது.

'கார்சேவா' மூலம் இந்த பழுதை சரி செய்யும் பணி மேற் கொள்ளப்பட்டது. இந்த பணி இப்போது பூரணமாக முடிவடைந்து விட்டது.

இதனை அடுத்துபொற் கோவிலிலிருந்து ராணுவத்தை வாபஸ் பெறுவது என்று மத்திய அரசு முடிவு செய்தது.

இந்த முடிவு பற்றி பிரதமர் இந்திராகாந்தி நேற்று வானொலி மற்றும் தொலைக்காட்சி மூலமாக நாட்டு மக்களுக்கு அறிவித்தார்.

## நம்பிக்கை ஏற்பட்டது

ராணுவம் முழுவதும் பொற்கோவிலிலிருந்து வாபஸ் பெறப்பட்டுவிட்டது.

தேவையான ஏற்பாடுகள் செய்யப்பட்டதும் கோவிலுக்குள் பக்தர்கள் நுழைய இப்போது இருக்கும் கட்டுப்பாடும் நீக்கப்படும் என்றும் பிரதமர் கூறினார்.

இந்த நாட்டின் கவலை எல்லாம் வழிபாட்டு தலங்கள் பிரிவினை வாதிகள், பயங்கர வாதிகள் மற்றும் சமூக விரோதிகளின் கூடாரமாகமாறக்கூடாது என்பது தான்.

அரசின் இப்போதைதி முடிவு பஞ்சாபில அமையையும், பரஸ்பர நம்பிக்கையையும் ஏறபடுத்தும் என நம்புவதாகவும் பிரதமர் இந்திராகாந்தி குறிப்பிட்டார்.

வீட்டுவசதி வாரிய

## அண்ணா ஊழியர்கள் சங்க அறிவிப்பு

சென்னை, செப். 26— தமிழ்நாடு வீட்டு வசதி வாரிய அண்ணா தொழிலாளர்கள் மற்றும் ஊழியர்கள் சங்க செயற்குழு கூட்டம் இன்று 26 ந்தேதி நடைபெறுவதாக இருந்தது, ஒத்தி வைக்கப்பட்டுள்ளதாக சங்க மாநில பொதுச் செயலாளர் எம். மோகன் தெரிவித்துள்ளார்.

கோவில் வருவாய்

## ரூ.1 கோடி

மதுரை, செப். 26— மதுரை மீனாட்சிகோவில் ஆண்டு வருவாய் இந்த ஆண்டில் 1கோடிரூபாயை எட்டுமென கோவில் தக்கார் வி என். சிதம்பரம் தெரிவிதுள்ளார்.

அண்ணா பவளவிழா:

## புரசை தொகுதியில் விளையாட்டு போட்டி

சென்னை. செப். 26. அண்ணா பவள விழாவை ஒட்டி புரசை தொகுதியின் சார்பாக கால்பந்துப் போட்டிகள் (நாளை 27 ந்தேதி) நடைபெறுகிறது.

அண்ணா பவளவிழாவை ஒட்டி சென்னை நகரில் பகுதிகள்தோறும் கழகத்தின் சார்பில விளையாட்டுப் போட்டிகள் நடைபெறுகிறது.

புரசைவாக்கம்தொகுதியின் சார்பில் 27-ந் தேதி காலை 8 மணிக்கு மாநகராட்சி உயர்நிலைப்பள்ளி பர்தர்கார்டன் பெரம்பூரல் கால்பந்து போட்டியை மாவட்டக் கழக செயலாளர் ஜேப்பியார் எம்.எல்.சி. துவக்கி வைக்கிறார்.

சென்னை மாவட்ட எம்.ஜி.ஆர். மன்ற செயலாளா இ. மதுசூதனன் எம்.எல்.சி தலைமைவகிக்கிறார். மத்திய சென்னை மாவட்ட பகுதி செயலாளர் ஏ. சி. சண்முகம் முன்னிலை வகிக்கிறார்.

புரசைத் தொகுதியைச் சேர்ந்த ஒவ்வொரு வட்ட செயலாளர்களும் விளையாட்டில் பங்கேற்போர் விவரத்தை 26-ந் தேதி மாலை 7 மணிக்குள் விளையாட்டு குழுஅமைப்பாளர் ஆ. ராஜாராமிடம் தருமாறு புரசை தொகுதி செயலாளர் கொ அ. ஜார்ஜ் கேட்டுக் கொண்டுளளாா.

மாதனூரில்

## அண்ணா பவளவிழா

வேலூர், செப். 26. வடஆர்காடு மாவட்டம் மாதனூரில் அண்ணா பவளவிழா பொதுக்கூட்டம் வரும் 29ந்தேதி மாலை 6-மணிக்கு நடைபெற விருக்கிறது.

வேலு, சி, பழனிமுன்னிணயில ஒன்றிய அவைத் தலைவர்வி. முனுசாமி தலைமைவகிக்கிறார் டி. கேசுப்பிரமணி கே. டிட்டு சி. சின்னராஜி ஆகியோர் வரவேற்கிறார்கள.

திருவை அண்ணாமலை குடிநீர் வடிகால் வாரியத் தலைவர் எ, எம். ரகுநாதன், சட்டசபை உறுப்பினர்கள் கோ. விஸ்வநாதன், என், குலசேகர பாண்டியன், ஜி. மூர்த்தி ஆகியோர் சிறப்புரை ஆற்றுகிறார்கள்.

வி. மனோகரன், ஜி. கிருஷ்ணன், இரா. சு. மணி, கே. தருமன், எஸ், வெங்கடேசன் மற்றும் பலர் கலந்து கொண்டு பேசுகிறார்கள்,

## தஞ்சை மாவட்ட வெள்ள நிவாரண பணிக்கு ரூ 588லட்சம்

தஞ்சாவூர், செப். 26 தஞ்சை மாவட்டத்தில் வெள்ள நிவாரணப் பணிகளுக்கு ரூ. 588 31 லடசத்தை அரசு அனுமதித்துள்ளது என்று மாவட்ட ஆடசிததலைவா சோசம்மா அறிவித்தார்.

தஞ்சை மாவட்ட ஆட்சித்தலைவர் சோசம்மா நிருபர்களிடம் கூறியதாவது:-

தஞ்சை மாவட்டத்தில் தற்காலிக மற்றும் நிரந்தர வெள்ள நிவாரணப் பணிக்கு ரூ. 588, 31 லட்சத்தை அரசு அனுமதித்துள்ளது.

இதில் ரூ. 210, 80 லட்சம் தாற்காலிகநிவாரணப் பணிகளான சாலை பராமரிப்பு, மதகுகள் கட்டுதல் தடுப்பு சுவர்கள் கட்டுதல் போன்றவைகளுக்காக

8-ம் பத்தி பார்க்க

8 ம் பத்தி தொடர்ச்சி

ஒதுக்கப்பட்டுள்ளது.

நிரந்தர வெள்ள நிவாரணப் பணிக்கு ரூ 30.20 லட்சம் நெடுஞ்சாலைத் துறைக்கு ஒதுக்கப்பட்டுள்ளது.

இவ்வாறு ஆட்சித் தலைவர் சோசம்மா கூறினார்.



## குடிசைப்பகுதி மக்களுக்கு சென்னையில் ஒரு லட்சத்து 80 ஆயிரம் கடனுதவி

சென்னை, செப். 26. வடசென்னையில் தீவிபத்தில் பாதிக்கப்பட்ட நாவலர் நடுஞ்செழியன் நகர், சாஸ்திரி நகர், வினோபா நகர், ராஜசேகரன் நகர், கருணாநிதி நகர் நேத்தாஜி நகர் ஆகிய பகுதிகளைச் சேர்ந்த குடிசைவாழ் மக்கள் 230 பேருக்கு 1 லட்சத்து 93 ஆயிரம் ரூபாய் கடனுதவியை குடிசை மாற்று வாரிய தலைவர் என். வி. என். செல்வம் வழங்கினார்.

கடனுதவியை வழங்கி என், வி என். செல்வம் பேசுகையில் கூறியதாவது!—

நல்வுற்ற குடிசை வாழ் மக்களுககு வாரியத்தின் மூலமாக இந்தியன் ஓவர்சீஸ் வங்கி சிறு தொழில் செய்ய அளிக்கும் கடன் உதவியை தவறாமல்பயன் படுத்திக் கொள்வதுடன் குறிப்பிட்ட காலத்தில் திருப்பிச் செலுத்த வேண்டும். அவ்வாறு செய்வதால் வாரியம் மேலும் உதவிட வசதியாக இருக்கும். இத்திட்டம் வெற்றி பெற்று மேனமேலும் பல குடிசை வாழ் மக்களுக்கு பயனளிக்கும்

தமிழ்நாடு குடிசைப் பகுதி மாற்று வாரியம் குடிசைப்பகுதியை மேம்படுத்த, குடிசை மேம்பாட்டுத் திட்டத்தினைச் செயல்படுத்து வருகிறது. அத்திட்டத்தினைத் தங்களது சொந்த திட்டமாக பொதுமக்கள் நினைத்து பொதுசொத்துகளைப் போல் பாதுகாக்க வேண்டும்.

அவர்கள் தாங்கள்வசிக்கும் இடத்தைச் சுத்தமாகவும், நகரைத் தூய்மையாகவும் வைத்துக்கொள்ள வேண்டும். குடிசைவாழ் மக்கள் அவர்கள் குடியிருக்கும் குடியிருப்பிற்கு நிர்ணயித்துள்ள குறைந்த தொகையை அபிவிருத்திச் செலவிற்கு என நிர்ணயித்துள்ள தொகையையும ஒழுங்காகச் செலுத்தவேண்டும்.

இந்தியன் ஓவர்சீஸ் வங்கி குடிசைவாழ் மக்களுக்கு வாரியத்தின் மூலமாக உதவி செய்ததற்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறேன் அதுபோல் நாட்டுடமையாக்கப்பட்ட அனைத்து வங்கிகளும் இவ்விதம் குடிசை வாழ் மக்களுக்கு உதவ வேண்டும்.

இவ்வாறு என். வி. என் செல்வம் கூறினார்.

விழாவிற்கு இந்தியன் ஓவர்சீஸ் வங்கி உதவி பொது மேலாளர் கே. எம் நாராயணன், வட்டச் செயலாளர் எஸ். சந்தானம் க. பா. சாமிநாதன், மற்றும் கழகத்தோழர்கள் எம். ஜி. ஆர். மன்ற நிர்வாகிகள மகளிர்பிரிவினர் மற்றும் பொது மக்கள் திரளாக வந்திருந்து சிறப்பித்தார்கள்.

சென்னை - குமரி

## கடற்கரை சாலையை தேசீய சாலையாக ஏற்க வேண்டும்

### டெல்லியில் அமைச்சர் கோவேந்தன் வலியுறுத்தல்

புதுடெல்லி, செப் 26. சென்னையிலிருந்து கன்னியாகுமரி செல்லும் கிழக்குக் கடற்கரை சாலையை தேசிய நெடுஞ்சாலையாக ஏற்கவேண்டும் என்று மத்திய அரசிடம் தமிழக அமைச்சர் கோவேந்தன் வலியுறுத்தினார்.

புதுடெல்லி சென்றுள்ள பிற்பட்டோர்நலத் துறை அமைச்சர் கோவேந்தன், ஜனாதிபதி ஜைலசிங், பிரதமர் இந்திராகாந்தி, மத்திய போக்குவரததுத் துறை அமைச்சர் வீரேந்திர பட்டீல் ஆகியோர்களை சந்தித்துப் பேசினார்.

பிற்பட்ட மக்களின் நலத்துக்காக மத்தியஅரசு தனியாக ஒரு அமைச்சகத்தை ஏற்படுத்த வேண்டும் என்றும் தமிழகத்தில அமைக்கப்பட்டுள்ள பிறபட்டோர் வளர்ச்சிக் கார்ப்பரேஷனுக்கு அதிக நிதியை ஒதுக்க வேண்டும என்றும பிரதமர் இந்திராவை அவர் கேட்டுகொண்டார்.

பிற்பட்ட மக்களுக்கான பொருளாதார அபிவிருத்தி திட்டங்களை செம்மையாக செயல படுத்துவதற்கு அந்தக் கார்பரேஷனுக்கு 10 கோடி ரூபாய் மூலதனம் ஒதுகக வேண்டும என்றும் அவர் வேண்டுகோள விடுத்தார்.

### அமைச்சர் கோரிக்கை

ஐ. ஏ. எஸ், ஐ பி எஸ். போன்ற இந்திய ஆட்சிப் பணிகள் மற்றும் சம்பந்தப்பட்ட பணிகளுக்காக தேர்வு எழுதுபவர்களின் வயது அதிகபட்சம் 28 ஆண்டுகளாக நிர்ணயிக்கபபட வேண்டும் என்றும் அமைச்சர் கேட்டுக் கொண்டார் அப்போதுதான்பிற்பட்ட சமுதாயத்தைச் சேர்ந்த மக்கள் அதிக அளவில் இந்தத் தேர்வுகளில் கலந்து கொளளமுடியும்.

அமைசசர்கோவேநதன் மத்திய போக்கு வரதது துறை அமைச்சர வீரேந்திரபட்டீலையும் சந்திததுப் பேசினார்.

### கடற்கரை சாலை

சென்னையில் இருந்து கன்னியாகுமரி வரை நீண்டு செல்லும் கிழக்குக் கடற்கரை சாலையை மத்திய அரசு நெடுஞ்சாலையாக ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று வலியுறுத்தினார். நாட்டின் பாதுகாப்புக்கு இந்த கடற்கரைசாலை மிகவும் இன்றியமையாததாக இருப்பதன் அவசியத்தையும் அவர் விளக்கினார்.

புதுடெல்லியில் பிற்படுத்தப்பட்ட மாணவர்களுக்கு ஐ. ஏ எஸ்., ஐ. பி. எஸ் மற்றும் அனைத்திந்திய ஆணைக்குழு தேர்வுகள் எழுத பயிற்சி அளிக்கும் ராவ் கல்வி வளாகத்தையும் அவர் பார்வையிட்டு அதிகாரிகளுடன் கலந்துரையாடினார்.

தனது மருமகன் மறைவால் துயருற்று இருக்கும் ஜனாதிபதி ஜைல்சிங்கை அவரது மாளிகையில் சந்தித்துமுதல்வர்புரட்சித் தலைவர் சார்பிலும் தமிழக மக்கள் சார்பிலும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொண்டார்.

அப்போது ஜனாதிபதி தமிழக முதல்வருக்கும் தமிழக மக்களுக்கும் தனது நன்றியை தெரிவித்தார்.

அமைச்சர் கோவேந்தனுடன் கழக எம். பி. ஐக்கையனும் சென்றிருந்தார்.



## பீடித் தொழிலாளர்க்கு மூக்கு கண்ணாடி

புதுடெல்லி செப் 26. பீடித்தொழிலில் 5 ஆண்டு காலம் பணியாற்றிய பீடித் தொழிலாளர்களுக்கு மூக்கு கண்ணாடி வாங்குவதற்குஅவர்களின் சேம நல நிதியிலிருந்து 50ரூபாய் வரை வழங்க அரசு முடிவுசெய்துள்ளது.

திருப்போரூர் பகுதியில்கழகக்கொடியை

## குழந்தைவேலு ஏற்றி வைத்தார்

திருப்போரூர் பகுதியில் உள்ள பல பகுதிகளுக்கு அமைச்சர் குழந்தைவேலு சென்றார்.

முந்திரித்தோப்பு அகரம், ஆமூர், பொருந்தவாக்கம் திருப்போரூர் நகரம் ஆகிய இடங்களில் கழகக் கொடியை, அவர் ஏற்றி வைத்தார்.

அண்ணா பவளவிழா கல்வெட்டுக்களையும் அமைச்சர் குழந்தைவேலு திறந்து வைத்தார்.

திருப்போரூர் ஒன்றிய செயலாளர் குகானந்தம், நகர செயலாளர் கணேசன், ஆமூர் வேலுமணி, அரிகிருஷ்ணன் மற்றும் பலர் விழாவில் பங்கேற்றனர்.

## திருச்சி கொதிகலன் தொழிலக அண்ணா தொழிலாளர் சங்கத் தோழர்களுக்கு

23-9-84-ம் தேதி திருச்சி மாவட்ட தொழிற் சங்கச் செயலாளர் வழக்கறிஞர் திரு. கே பெருமாள் அவர்கள் தலைமையில் திருவரம்பூரில் நடைபெற்ற கொதிகலன் தொழிலக அண்ணா தொழிலாளர் சங்கத்தின் சிறப்புப் பொது உறுப்பினர்கள் கூட்டத்தில் ஏகமனதாக எடுக்கப்பட்ட முடிவிற்கேற்ப கீழ்க்கண்ட நிர்வாகிகள் கழகநிறுவனத் தலைவர் மாண்புமிகு டாக்டர் புரட்சித்தலைவர் அவர்கள் ஒப்புதலுடன் அறிவிக்கப்படுகிறார்கள்.

தலைவர் :
க. சுப்பு, பி. ஏ., பி எல்.,

துணைத் தலைவர்கள்:
கே. எம். அங்கமுத்து,
எ. அழகிரிசாமி,
எஸ். கோபால்

பொதுச்செயலாளர்:
கே. மகாலிங்கம்,

துணைப் பொதுச்செயலாளர்:
சி. சாமிதுரை

துணைச் செயலாளர்கள்:
எம். இளங்கோவன்
பி. தட்சிண மூர்த்தி
கே. மணி

அமைப்புச் செயலாளர்:
எஸ். தட்சிணாமூர்த்தி

பொருளாளர்:
பி. துரைராஜ்

வை. பெருமாள்,
பொதுச்செயலாளர்.
சென்னை-14 அண்ணா தொழிற்சங்கப் பேரவை.

# நர்மதா - கல்பதரு லாட்டரிமுடிவுகள்

## நர்மதா

புதுடெல்லி, செப். 26- நர்மதா லாட்டரியின் 56-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ 1 லட்சம்
ஆவி 523340

ஆறுதல் பரிசு
தலா ரூ 1,000
டி.வி 523339 5233341
டி. டபிள்யூ 523340
டி. எக்ஸ் 523340

2-வது பரிசு
தலா ரூ. 10 ஆயிரம்
டி. வ-511018
டி. டபிள்யூ-380660
டி. எக்ஸ்-469172

கீழ்க் கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ. 1000
78203 43452 66573
63295 49123 20381
85629 77355 49920
32058

4-வது பரிசு
(தலா ரூ. 100)
7898 8588 2468
6992 1864 4801
7635 5072 6031
7096

5-வது பரிசு
(தலா ரூ. 50)
6021 9614 6685
6591 2543 8303
5822 2655 6215
8473

6-வது பரிசு
(தலா ரூ. 20)
5795 4767 1739 4883
4386 1747 1600 0195
1004 0603

7-வது பரிசு
(தலா ரூ 10)
764 229 680 582 772
335 608 645 294 644

## தனலட்சுமி

தனலட்சுமி லாட்டரியின் 298-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 25 ஆயிரம்
டி.பி 239541

இதே எண்ணுள்ள மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 500 உண்டு

2-வது பரிசு
தலா ரூ 1,000
டி. எல் 196420 135545
டி. எம் 202594 304154
டி. என் 195799 146602
டி. ஓ 199780 325457
டி. பி 146345 145817

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ 100
9541

4-வது பரிசு
தலா ரூ. 50
541

5-வது பரிசு
1
தலா ரூ. 5
41

6-வது பரிசு
தலா ரூ. 1

7-வது பரிசு
50 காசு 2

விற்பனையாளர் பரிசு
தலா ரூ 20
டி. எல்-5213 டி. எம்.9620
டி. என்-5471 டி. ஓ 5965
டி. பி-0102

## இமாலயன்

இமாலயன் லாட்டரியின் 809-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
(தலா ரூ 1 லட்சம்)
எச்.எஸ்- 367234 317171
எச். டி- 199949 457454
எச். யூ- 140278 812457

2-வது பரிசு
(தலா ரூ 10 ஆயிரம்)
எச். எஸ்- 468175
எச். டி- 153484
எச். யூ- 750071

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ. 500
78217 52755 70344
0904 22307 60658
41828 21568 41658
99174

4-வது பரிசு
தலா ரூ. 50
7662 2225 3402
1601 3640 3461
0308 1164 4450
3016

5-வது பரிசு
தலா ரூ. 20
8421 1345 9729 8352
3613 7166 5443 9628
8955 6150

6-வது பரிசு
தலா ரூ. 10
065 140 260 359 487
549 603 766 875 920

7-வது பரிசு
தலா ரூ. 5
075 181 240 340 427
522 660 752 858 958

## கல்பதரு

கல்பதரு லாட்டரியின் 130-வது குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 2 லட்சம்
கே டி ஐ 139393

இதே எண்களை உடைய மற்ற வரிசை சீட்டுகளுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ 1000 உண்டு

2-வது பரிசு
தலா ரூ 10 ஆயிரம்
கே டி ஜி 271177
கே டி எச் 221557
கே டி ஐ 113658
கே டி ஜே 344654

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு.

3-வது பரிசு
தலா ரூ. 1000
46986 72395 06956
81394 99600 11202
68616 29466 34949
22979

4-வது பரிசு
தலா ரூ. 100 911

5-வது பரிசு
தலா ரூ. 50
776

6-வது பரிசு
தலா ரூ. 20
445

7-வது பரிசு
தலா ரூ 10
415 035 447 575 827
601 641 613

ஏஜெண்டுகள் பரிசு
தலா ரூ 50
கே டி ஜி 9640 6714
கே டி எச் 4807 0640
கே டி ஐ 0774 0606
கே டி ஜே 8067 0136

விற்பனையாளர் பரிசு
(தலா ரூ. 50
கே டி ஜி 4073 5044
கே டி எச் 1911 0676
கே டி ஐ 0815 8739
கே டி ஜே 5525 0894

## கர்நாடக மினி

கர்நாடக லாட்டரி மினி குலுக்கல் நேற்று நடந்தது. முடிவுகள் வருமாறு:-

முதல் பரிசு
ரூ. 40 ஆயிரம்
பி டபிள்யூ 1032649

2-வது பரிசு
தலா ரூ 1000
பி யூ வரிசை:-
1163448 1168162
1219635
பி வி வரிசை:
1050225 1084056
1116934
பி டபிள்யூ வரிசை:-
1011155 1011228
1120954
பி எக்ஸ் வரிசை:-
1032596 1071104
1109395
பி ஒய் வரிசை:-
1084733 1121485
1263999
பி இசட் வரிசை:-
1105055 1134850
1170195

3-வது பரிசு
தலா ரூ. 500
பி யூ வரிசை:
1063822 1194967
1217102 1269375
பி வி வரிசை:
106542 1029452
1059323 1148975
பி டபிள்யூ வரிசை:
1216172 1117134
1208315 1012309
பி எக்ஸ் வரிசை:
1069227 1071589
1131217 1143200
பி ஒய் வரிசை:
1017702 1042228
1124361 1199475
பி இசட் வரிசை:
1030260 1079888
1103885 1275211

கீழ்க்கண்ட எண்களில் முடியும் எல்லா வரிசை சீட்டுகளுக்கும் பரிசு உண்டு

4வது பரிசு
தலா ரூ 1.0
18425 21311 34819
39544 75621 76287

5வது பரிசு
தலா ரூ 10
387 664

6வது பரிசு
தலா ரூ 5
33 36 97

# காந்தி படத்தின் மூலம் ரூ 12 கோடி வருமானம்

பம்பாய், செப். 26- பென்கிங்ஸ்லி காந்தியாகவும், ரோகிணி, அட்டங்காடி கஸ்தூரிபாயாகவும் நடித்து சர் ரிச்சர்டு அட்டன்பரோ இயக்கி தயாரித்த காந்தி ஆங்கில திரைப்படத்தின் மூலம் தேசிய திரைப்பட வளர்ச்சிக்கழகத்திற்கு 12 கோடியே 27 லட்ச ரூபாய் வருமானம் கிடைத்துள்ளது. அதில் 10 கோடியே 34 லட்ச ரூபாய் அந்நியச் செலாவணியாகும்.

இத்தகவலை தேசிய திரைப்பட வளர்ச்சி கழக மேலாண்மை இயக்குனர் மாலதிதம்பே வைத்யா நிருபர்களிடம் தெரிவித்தார்.

# வைகை எக்ஸ்பிரஸ் எல்லா நாட்களும் ஓடும்

மதுரை, செப். 26- மதுரை-சென்னைக்கு இடையே ஓடும் "வைகை எக்ஸ்பிரஸ்" ரயில் இனி எல்லா நாட்களிலும் ஓடும். முன்பு இந்த ரயில் செவ்வாய் கிழமை தோறும் ஓடுவதில்லை.

வரும் அக்டோபர் 1-ந் தேதி முதல் செவ்வாய் கிழமை உட்பட எல்லா நாட்களும் ஓடும் என்று ரயில்வே அதிகாரி ஒருவர் தெரிவித்துள்ளார்.

# பிரணாப் முகர்ஜிக்கு பாராட்டு

புதுடெல்லி, செப். 26- பிரச்சினையான நேரத்தில் தங்கள் நாட்டின் பொருளாதார நிலைமையை நல்ல முறையில் வைத்திருந்த திறமையான நிதி அமைச்சர்கள் என்று உலகின் 5 நாடுகளின் நிதி அமைச்சர்கள் பாராட்டப்பட்டுள்ளனர், அவர்களில் இந்திய நிதி அமைச்சர் பிரணாப் முகர்ஜியும் ஒருவர்.

நியூயார்க்கிலிருந்து வெளிவரும் 'தி எகனாமி' என்ற புகழ்பெற்ற ஏடு இவ்வாறு பாராட்டியுள்ளது.

இலங்கை ராணுவம் வெறிச்செயல்

# வீடு வீடாகப் புகுந்து 100 தமிழர்களை கைதுசெய்தகொடுமை

கொழும்பு, செப். 26 இலங்கையில் ராணுவத்தினர் வீடுவீடாக புகுந்து 100 தமிழர்களை கைது செய்துள்ளனர்.

இலங்கை ராணுவத்தினர் தமிழர்கள் மீது நடத்திவரும் காட்டு மிராண்டித் தனத்தைத் தகர்க்கும் வகையில் விடுதலைப்புலிகள் அவர்களுக்குப் பதிலடி கொடுத்து வருகின்றனர்.

விடுதலை புலிகளின் தாக்குதலை சமாளிக்க முடியாத ராணுவத்தினர் அப்பாவி தமிழர்களை கொன்று குவித்து வருகின்றனர்.

நேற்று முல்லைத் தீவு என்ற இடத்தில் ராணுவத்தினர் வீடு வீடாகப் புகுந்து தமிழர்களை வேட்டையாடினர்.

நேற்று மட்டும் அப்பகுதியில் உள்ள 100 தமிழர்களை ராணுவத்தினர் கைது செய்துள்ளனர்.

மேலும் அப்பகுதியில் தமிழர்களை வேட்டையாட அங்குள்ள 3 பள்ளிக் கூடங்களில் ஏராளமான ராணுவத்தினர் குவிக்கப்பட்டுள்ளனர்.

இதற்கிடையில் இலங்கை முன்னாள் பிரதமர் பண்டாரநாயகா தலைமையிலான இலங்கை சுதந்திரா கட்சியின் மத்தியக் கமிட்டிக் கூட்டம் நேற்று நடைபெற்றது.

இக்கூட்டத்தில் இலங்கை தமிழர் பிரச்சினைக்கு தீர்வு காண ஜெயவர்த்தனா அறிவித்துள்ள புதிய யோசனைகளை பரிசீலனை செய்வதற்காக புதிய கமிட்டி அமைப்பது என்றும், அந்த கமிட்டி சமீபத்தில் பத்திரிகைகளில் வெளியான செய்திகளின் அடிப்படையில் ஜெயவர்த்தனேயின் புதிய யோசனைகளை பரிசீலனை செய்வது என்றும் முடிவு செய்யப்பட்டது.

சென்னை சென்டிரலில்

# பெட்டிகள் திருடிய ஆசாமி கைது

சென்னை, செப். 26. சென்னை சென்டிரல் ரெயில் நிலையத்தில் சந்தேகப்படும்படியாக திரிந்து கொண்டிருந்த விக்டர் (வயது 26) என்ற ஆசாமியை ரயில்வே போலீசார் கைது செய்து விசாரித்தனர்.

விசாரணையில் விக்டரிடமிருந்து 6 பெட்டிகள் மீட்கப்பட்டன.

இவைகளை இந்த ஆசாமி ரெயில் பயணிகளிடம் இருந்து திருடியதாக கூறப்படுகிறது.

பெட்டிகளில் 6 சவரன் தங்க நகைகள் இருந்தன. கல்கத்தாவைச் சேர்ந்த காசிம் என்பவரின் பெட்டியில் இருந்த 2 ஆயிரம் ரூபாயை விக்டர் எடுத்து மனைவிக்கு நகை வாங்கி கொடுத்ததாகவும் விசாரணையில் தெரியவந்தது.

கைதான விக்டரை 15 நாள் காவலில் வைக்க சென்னை நகர 16-வது கோர்ட் மாஜிஸ்டிரேட் மணிமாறன் உத்தரவிட்டார்,

சென்னை பேரணிக்கு

# 10 பேருந்தில் திருச்சி தோழர்கள் வருகை

திருச்சி, செப் 26- சென்னையில் 30 ந் தேதி நடைபெற உள்ள பேரறிஞர் அண்ணா பவள விழா பேரணி-மற்றும் கூட்டத்தில் பங்கேற்க திருச்சியில் இருந்து மாவட்ட எம் ஜி ஆர் இளைஞர் அணியினர் 10 பேருந்துகளில் சென்னை செல்லுகிறார்கள்.

செல்ல விரும்புவோர் சீருடையுடன், 29 ந்தேதி காலை 7 மணிக்கு திருச்சி பேருந்து நிலையம் அருகே வருமாறு மாவட்ட எம். ஜி. ஆர். இளைஞர் அணி செயலாளர் இளவரசன் கேட்டுக் கொண்டுள்ளார்.



Edited and Published by K. RAVINDRAN on behalf of Thangamani Publications and Printed by All India Anna D. M. K. Perarignar Anna Trust Press at 34, Nelson Manickam Road, Madras—600 029.







# ★ பேரறிஞர் அண்ணா பவளவிழா ★

**நாள்: 28-9-84 இடம்: கலைவாணர் அரங்கம்**

காலை 9-00 மணி - மங்கள இசை

10-00 மணி - வரவேற்புரை

கழக பொருளாளர் திரு. செ. மாதவன்

பவளவிழாத் தொடக்கவுரை,

மாண்புமிகு கல்வியமைச்சர் செ. அரங்கநாயகம்

அண்ணா படத்திறப்பு:

மாண்புமிகு டாக்டர் **புரட்சித்தலைவர்** அவர்கள்

11.00 மணி - கவியரங்கம்

தலைவர்: கவிஞர் வாலி

கவி பாடுவோர்: பாவலர் மா. முத்துசாமி
கவிஞர் இ. முத்துராமலிங்கம்
கவிஞர் நா. காமராசன்
புலவர் அறிவுடை நம்பி
கவிஞர் மணிமொழி
கவிஞர் குருவிக்கரம்பை சண்முகம்
கவிஞர் இளந்தேவன்
கவிஞர் திருமதி அரசு மணிமேகலை
டாக்டர் சரளா இராசகோபாலன்
கவிஞர் திருமதி நிர்மலா சுரேஷ்

மாலை 3-00 மணி — வில்லுப்பாட்டு

தலைவர்: திரு பி முசிறிப்புத்தன் எம் எல் ஏ

"எல்லோர்க்கும் நல்லவர்"

கொத்தமங்கலம் சுப்பு விஸ்வநாதன் குழுவினர்

4.00 மணி: — பட்டிமன்றம்

"அறிஞர் அண்ணாவின் நீடித்த புகழுக்குக் காரணம் அரசியல் தொண்டா? கலைத்தொண்டா?"

தொடக்கவுரை: மாண்புமிகு டாக்டர் கா. காளிமுத்து

நடுவர்: தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள்

| அரசியல் தொண்டே! | கலைத்தொண்டே |
|---|---|
| அணித்தலைவர்: | அணித்தலைவர்: |
| மாண்புமிகு கே. ஏ. கே. | மாண்புமிகு ஆர்.எம்.வீ. |
| மாண்புமிகு ப. குழந்தைவேலு | மாண்புமிகு சு. முத்துசாமி |
| மாண்புமிகு எஸ் இராகவானந்தம் | மாண்புமிகு ஆர். சவுந்தரராசன் |
| மாண்புமிகு எஸ். திருநாவுக்கரசு | மாண்புமிகு எஸ் ஆர் இராதா |

மாலை 6 மணி — இசை நிகழ்ச்சி

இசை மாமணி டாக்டர் சீர்காழி கோவிந்தராசன்

இரவு 9.00 மணி — நாடகம்:

"நீதி குவண மயக்கம்"

தலைமை: இலட்சிய நடிகர் எஸ் எஸ் ஆர்

**நாள்: 29-9-84**

**இடம்: கலைவாணர் அரங்கம்**

காலை 9-00 மணி — மெல்லிசை

மெல்லிசை மன்னா விசுவநாதன் குழுவினர்

காலை 11-00 மணி — கருத்தரங்கம்

வரவேற்புரை:

மாண்புமிகு சி. பொன்னையன்

தொடக்கவுரை

திரு. இராஜாமுகமது

தலைவர்:

திருமதி சத்தியவாணிமுத்து
திரு. இரா. மோகனரங்கம் எம் பி.
திரு. ஆலடி அருணா எம். பி.
திரு. வலம்புரிஜான் எம். பி.
திரு. க. சுப்பு.
திருமதி. சுலோசனாசம்பத்
திருமதி. பா. வளர்மதி

மாலை 3-00 மணி — மெல்லிசை

திரைப்பட இசை அமைப்பாளர் சந்திரபோஸ் குழுவினர்
திருமதி. பி. சுசீலா,
திருமதி. வாணிஜெயராம்,
திரு. மலேசியாவாசுதேவன்

மாலை 6-00 மணி

அண்ணா பவள விழா மலர் வெளியீடுதல்

வரவேற்புரை:

மாண்புமிகு பண்ருட்டியார் (மலர்க்குழு தலைவர்)

தலைவர்:

மாண்புமிகு க. இராசாராம்

மலர் வெளியிடுதலும் பரிசுகள் வழங்கலும்

மாண்புமிகு டாக்டர்

**புரட்சித்தலைவர்**

அவர்கள்

முதல் மலர் பெறுபவர்:

மாண்புமிகு டாக்டர் நாவலர்

சிறப்புரை

மாண்புமிகு ம. பொ. சி.
திரு. நெ. து. சுந்தரவடிவேலு,
திரு. குழந்தைசாமி (துணைவேந்தர்)

நன்றி நவிலல்:

திரு. துரை கோவிந்தராசன்

இரவு:

வெண்ணிற ஆடை நிர்மலா குழுவினர் நாட்டியம்

இங்ஙனம்

அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக
பேரறிஞர் அண்ணா அறக்கட்டளை

**நாள்: 30-9-84 இடம்: கலைவாணர் அரங்கம்**

காலை 9-00 மணி — அண்ணாவின் 'ஓர் இரவு' திரைப்படம்

மாலை 8-00 மணி

பேரணி - மறைமலை அடிகள் பாலத்திலிருந்து சீரணி

சீரணி அரங்கம்

மாலை 6-00 மணி

அண்ணா பவள விழா பொதுக்கூட்டம்

கலை நிகழ்ச்சி:

'நவரசம்' ஜி. கே. எஸ், எம். எல் ஏ. குழுவினர்

வரவேற்புரை:

திரு. ஜேப்பியார் எம்.எல் சி.

தலைவர்:

மாண்புமிகு டாக்டர் நாவலர்

சிறப்புரை:

மாண்புமிகு டாக்டர்

**புரட்சித்தலைவர்**

அவர்கள்

திருமிகு. ப. உ. ச.
மாண்புமிகு பண்ருட்டியார்
மாண்புமிகு கே. ஏ. கே.
மாண்புமிகு டாக்டர் கா. காளிமுத்து
மாண்புமிகு எஸ். திருநாவுக்கரசு
செல்வி. ஜெயலலிதா எம். பி.
திரு. திருப்பூர் இரா. மணிமாறன் எம்.எல். ஏ.
திரு. இ. மதுசூதனன் எம். எல். சி.
திரு. ஏ. சி. சண்முகம் எம். எல். ஏ.
திரு. மு. வேதாசலம்

நன்றி:

திரு. டி. கே. கபாலி எம். எல். ஏ

இங்ஙனம்

அனைத்திந்திய அண்ணா தி.மு.கழகம்
சென்னை மாவட்டக் கழகம்